# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – மார்கழி

2021 – டிசம்பர்



சின்மயா மிஷன் மற்றும் தேசிய சிந்தனைக் கழகம் சார்பில் நடைபெற்ற பாரதியார் ஜெயந்தி விழா மற்றும் புத்தக வெளியீட்டு விழாவில் மேதகு தமிழ்நாடு கவர்னர் ஆர்.என். ரவி அவர்களுடன் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – மார்கழி

2021 – டிசம்பர் இதழ் – 114

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

## திருநந்தி தேவர்

தம்மைவந்து அடைந்த நல்லோர் தம்மை நன்கு உணர்ந்து அவத்தை

மும்மையும் கடந்து தாமே முழுதுமாம் தன்மை வாய்ப்பச்

செம்மைநன் னெறிசால் வேத சிரப்பொருள் சேவை நல்கும்

எம்மையா ளுடைய நந்தி தேவரை இறைஞ்சல் செய்வாம்.

*– கோவிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

அண்மையில் மனம் நெகிழ வைத்த நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. சென்னையில் நமது மடாலய அறக்கட்டளைகள் அனைத்திலும் அறங்காவலராகவும் Internal auditor ஆகவும் உதவி வருகின்ற உயர்திரு. T.சிவசுப்பிரமணியம் அவர்களைச் சந்திக்க அலுவல் காரணமாக அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தேன்.

அவர் இல்லத்தில் ஓர் அறையில் அவருடைய வயது முதிர்ந்த தாயார் அவர்கள் உடல்நலக்குறைவால் படுத்திருந்தார்கள். அந்த அறைக்கு என்னை அழைத்துச் சென்று தன்னுடைய தாயாருக்கு என்னை அறிமுகம் செய்து வைத்து என்னை ஆசி வழங்குமாறு வேண்டினார். அந்த மூதாட்டியும் மலர்ந்த முகத்தோடு இருகரம் கூப்பி வணங்கினார். அவர் படுத்திருந்த நிலை கண்டு ஒரு கணம் மிக வருந்தினேன்.

அந்த மூதாட்டி 90 வயதைக் கடந்தவர்கள், சில காலமாக நுரையீரல் தொற்றால் அவதிப்படுகிறார்கள். அவர்களைத் தனியார் மருத்துவமனையில் வைத்துச் சிலகாலம் மருத்துவம் பார்த்திருக்கிறார்கள். திரு.சிவசுப்பிரமணியம் அவர்கள் மருத்துவமனையில் தனிமை கிடைக்கவில்லை, சிறப்பு உபசாரங்களைச் செய்வதற்கு வசதியும் இல்லை என்று எண்ணிய காரணத்தால் தன்னுடைய இல்லத்திற்கே அழைத்து வந்து மருத்துவ வசதிகள் அனைத்தும் செய்து பார்த்து வருகிறார்கள். Auditor சிவசுப்பிரமணியம் தந்தையார் திரு. தியாகராஜன் அவர்கள் 95 வயது கடந்தவர். பூஜை புனஸ்காரங்கள் விடாது செய்து தன் காரியங்களைத் தானே பார்த்துக் கொள்கிற உடல்நலத்தோடு இருக்கிறார்கள்.

Auditor தன்னுடைய வீட்டிலே மருத்துவமனையில் உள்ளதைப் போல் சாய்ந்து உட்காரும், படுக்கும் வசதிகள் கொண்ட கட்டில் ஒன்று செய்து தினமும் தொடர்ந்து பிராணவாயு (Oxygen) கொடுப்பதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்துள்ளார். மூன்று நர்சுகள் தாயாரைப் பார்த்துக் கொள்ள நியமித்து இருக்கிறார். என்னிடம் அவர்கள் உயிர் உள்ளவரை மனநிறைவோடு தகுந்த வசதிகளோடு இருக்க வேண்டும் என்பதனால் வீட்டிற்கே கூட்டி வந்துவிட்டோம் என்று சொன்னார்கள்.

வயது முதிர்ந்த நிலையிலும் தன் தாயாருக்கு வசதிக் குறைவு ஏற்படக் கூடாது, அவர்களுடைய மனம் வருத்தம் இல்லாமல் அமைதியாக இருக்க வேண்டும், மகிழ்வாக இருக்க வேண்டும் என்ற பேரன்புள்ளம் கொண்டுள்ளார்.

அந்த மூதாட்டியும் மகன் மருமகள் பேரன் பேத்தி அனைவருடன் சகஜமாகப் பேசுகிறார். இன்னொரு வியப்பான விஷயம். தேவாரம், திருவாசகம், பிரபந்தம் போன்ற பக்திப் பாடல்களைக் கேட்டு அமைதியடைகிறார். அதற்கு ஏற்றாற் போல் Auditor மனைவியும் இனிமையான குரலில் பக்திப் பாடல்களைப் பாடி மூதாட்டியை உறங்கச் செய்கிறார். இப்படியொரு இணக்கமான மாமியார் உறவு எனக்கு வியப்பை அளித்தது.

நான் பாடல்களைப் பற்றிக் கேட்டபொழுது தேவாரம் திருவாசகம் போன்ற பக்திப் பாடல்கள், இசைத் தட்டுகள் இருந்தால் அனுப்புங்கள் என்றார். இசையும் மருத்துவத்தில் ஒரு பங்கு என்பதை மருத்துவத் துறையினர் ஒப்புக் கொண்டுள்ளனர். அதனை நான் கண்கூடாகப் பார்த்தேன்.

தாய், தந்தையரை, உறவினரை முழுமனதோடும் அன்போடும் அக்கறையோடும் கவனித்துக் கொள்கின்ற பண்பு நம் மக்களிடம், குறிப்பாக, குழந்தைகளிடம் பதியவைக்கப்பட வேண்டும். எந்த ஜீவனுக்கும் வாழ்நாளில் கடைசிநாள் வரை அமைதியையும் அன்பையும் பாசத்தையும் பெறுவதற்கு உரிமை உண்டு. அதனை அளிப்பது சுற்றி இருப்பவர்களின் கடமை. நோயாளிகளை மதித்து அன்பும் அக்கறையும் செலுத்த வேண்டும். அவர்கள் மனத்திற்கு மகிழ்வும் நிம்மதியும் தரும் செயல்களைக் கண்டிப்பாகச் செய்ய வேண்டும். பக்திப் பாடல்களை நல்ல இலக்கியப் பாடல்களை நம் குழந்தைகள் கற்றுப் பயன்பெற வேண்டும் அடுத்தவர்க்குப் பயன் அளிக்க வேண்டும். இதனைக் குழந்தைகளுக்குக் கற்பிப்பீர்களாக! ஆசிர்வாதங்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

# கம்பராமாயணம் (தொடர்ச்சி)

## சூர்ப்பனகை

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

இலங்கைத் தீவை அடைந்து இராவணன் அரசபைக்கு அழுத கண்ணும் புலம்பிய வாயுமாகச் சூர்ப்பனகை நுழைகின்ற பொழுது அரசவையின் வீறார்ந்த தோற்றத்தைப் பலபடப் பலகவிகளாலே கம்பர் வர்ணிக்கிறார். சூரிய பிரகாசமாக விளங்கியது அரசவை; நவரத்தின தோரணங்களும் ஒளி வீசும் தங்க சிம்மாசனமும் அரம்பையர் கவரிவீச, தேவ கன்னிகைகள் நடனமாட ரசித்து மகிழ்ந்து கொண்டிருந்தான்.

இதுசமயம் ஒளிவீசும் மலையின் நிழல்போலக் கருமேக வண்ணம் மலையாக மார்பிலும் மூக்கிலும் அறுபட்டுச் சிந்தி வழிகின்ற இரத்தச் சிவப்போடு கருங்குன்று என வந்தாள் சூர்ப்பனகை. அவள் அழுகுரலையும் அவல நிலையும் கண்டு பதறிய இராவணன் உனக்கு இத்தீங்கு செய்தவன் யார் என்று சினந்து கேட்க, சூர்ப்பனகை சொல்லத் தொடங்கினாள். அவள் நிலையைக் கம்பன் திறம்பட, கையில் தாங்கிய தலையும் இரத்தம் ஆறாக வடிந்து ஓட அறுபட்ட கொங்கையும் மூக்கோடும் இடிஇடிப்பது போல அழுகைக் குரலோடு வந்தாள் என்கிறார்.

***தங்கையும் அவ்வழித் தலையில் தாங்கிய***<br>***செங்கையள், சோரியின் தாரை சேந்திழி***<br>***கொங்கையள், மூக்கிலள், குழையின் காதிலள்,***<br>***மங்குலின் ஒலிபடத் திறந்த வாயினள்.***

உனக்கு இத்தீங்கு செய்தவன் யார் என்ற கேள்விக்குப் பதில் சொல்வாளாக

***வற்கலையர் வார்கழலர் மார்பின் அணிநூலர்***<br>***விற்கலையர் வேதம்உரை நாவர் தனி மெய்யர்***<br>***உற்(கு) அலையர் உன்னைஓர் துகள்துணையும் உன்னார்***<br>***சொல்கலை எனத்தொலைவில் தூணிகள் சுமந்தார்.***

மரவுரி தரித்த தவம் செய்கின்ற வில் ஏந்திய வீரர்கள் உன்

ஆளுகைக்கு உட்பட்ட வனத்திலே தவம் செய்யும் முனிவர்களுக்கு அரணாக நிற்கின்ற வில் வீரர்கள் உன் ஆட்சியைத் துரும்பென மதிப்பவர்கள்; அவர்களை ஒன்றும் செய்ய முடியாது. நம்முடைய அரக்கர் குலத்தை வேரோடு அறுக்கச் சூளுரைத்து, கரதூடணரை மூன்று நொடிகளிலே படையோடு விண்ணுலகம் அடையச் செய்தவர்கள்; அவர்கள் கேவலம் மனித இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் இராம இலக்குவன் எனப் பெயர் கொண்டவர்கள் என்று சொன்னாள். கேவலம் ஒரு மானுடனைத் தன் தங்கை புகழ்ந்து பேசப் பெறாத இலங்கை வேந்தன் ஆர்ப்பரித்து எழுந்தான்.

ஆனால் சூர்ப்பனகை இராமன் வீரத்தைப் பற்றியோ சகோதரர்கள் கரண், தூடணன் மறைவு பற்றியோ கவலை கொள்ளாது இராமனைத் தான் அடையச் சீதையை அவளிடமிருந்து பிரிக்க வேண்டும்; அது இராவணன் ஒருவனால் தான் இயலும் என்று கருதித் தன் சூழ்ச்சித் திறத்தால் சொல் வன்மையால் சீதையின் பேரழகை இராவணன் மனதில் பதியுமாறு திறமையாகச் சொல்கிறாள். இதனைப் பலபாடல்களில் அழகாகவும் நகைச்சுவையும் கலந்து தோன்றக் கம்பர் பாடுகிறார்.

மஞ்சொக்கும் அளக ஓதி
        மழைஒக்கும் வடிந்த கூந்தல்
பஞ்சொக்கும் அடிகள் செய்ய
        பவளத்தின் விரல்கள் ஐய!
அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக்
        கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற் றேனும்
        கடலினும் பெரிய கண்கள்.

பாகத்தில் ஒருவன் வைத்தான்
        பங்கயத்(து) இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்
        அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தில் பிறந்த மின்னை

வென்ற நுண்ணிடையி னாளை
மாகத்தோள் வீர பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்தி?

மீன்கொண்(டு) ஊடாடும் வேலை
மேகலை உலகம் ஏத்தத்
தேன்கொண்(டு) ஊடாடும் கூந்தல்
சிற்றிடைச் சீதை என்னும்
மான்கொண்(டு) ஊடாடு நீ உன்
வாள்வலி உலகம் காண
யான்கொண்(டு) ஊடாடும் வண்ணம்
இராமனைத் தருதி என்பால்

பார்வதியை இடப்பாகத்தில் வைத்தான் சிவன், இலக்குமியை நெஞ்சில் வைத்தான் விஷ்ணு, சரஸ்வதியை நாக்கில் வைத்தான் பிரம்மன், சீதையை உன் தேகத்தில் எவ்விடத்தில் வைத்து வாழ்வாய் என்று கேலியாக உன்னால் அது முடியாத காரியம் என்ற கேலியும் தோன்றக் கூறி இராவணனை உசுப்பேத்தி அவன் முழுமையாகக் காமக் கடலில் அழுந்தச் செய்தாள்.

இராவணனும் அவளுடைய சூழ்ச்சித் திறனுக்கு ஆட்பட்டுக் காமவெறி கொண்டு எவ்வாறாயினும் சீதையை அடைவது என்ற நோக்கில் புறப்படுகிறான். புறப்பட்டவன் நேராக பஞ்சவடிக்குச் சென்று இராம இலக்குவரை எதிர் கொண்டு வெற்றி பெற்றுச் சீதையை கவர்ந்து வர முயன்றானா என்றால்? அது இல்லை. உள்ளூர இராம இலக்குவனர் வீரத்தில் நம்பிக்கை கொண்டு வெற்றி பெறுவது இயலாது என்று உள்ளூர நினைத்தானா உடனடியாக தன் அத்தை தாடகையின் மகனான மாரீசனைக் கொண்டு சூழ்ச்சி செய்து சீதையைக் கவர முயன்றான்.

பிரம்மதேவனாலே கடவுளர் தேவர்களாலே அழிக்க முடியாத வரத்தையும் நீண்ட ஆயுளையும் பெற்ற இராவணன் கூடவே ஒரு சாபத்தையும் பெற்றிருந்தான். அயல்மாதரை அவர் ஒப்புதல் இன்றித் தொடும்கால் பஸ்பமாகி விடுவான் என்ற சாபத்தையும் பெற்றிருந்தான். ஆனால் சீதையைச் சிறைபிடித்து வந்து அவளை

அச்சுறுத்தி தன் இச்சைக்கு இணங்கச் செய்யலாம் என்ற நம்பிக்கை கொண்டு மாரீசனைச் சென்று அடைந்தான்.

மாரீசனைச் சந்தித்து விவரங்கள் சொன்னவுடன் மாரீசன் தன் மருமகனுக்கு உண்மையை அறிய வைக்க இராமனுடைய வீரத்தையும் சீதையினுடைய கற்பின் திறத்தையும் விளக்க முயல்கிறான். பிறன்மனை விரும்புதல் கேடு விளைவிக்கும் இராமரை எதிர்த்துப் போரிட்டால் நீ அழிவாய் என்ற அறிவுரையைப் பொதுவாக விபீஷணன் கும்பகர்ணனும் எடுத்துரைத்ததாக அனைவரும் நம்புகிறோம். ஆனால் சீதையைச் சூழச்சித் திறத்தால் கவர்ந்து போகும் முன்னரே மாரீசன் பலவாறாக உரைத்ததாகக் கம்பர் கூறுகிறார்.

நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார் நடையல்லா
வாரங் கொண்டார் மற்றொரு வன்தன் மனைவாழும்
தாரங் கொண்டார் என்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈரும் கண்டாய் கண்டகர் உய்ந்தார் எவர்ஐயா?

ஈசன்முதல் மற்றும் இமை யோர்உலகும் மற்றைத்
தேசமுதல் முற்றும்ஓர் அமைப்பின் உயிர்தின்ப
கோசிகன் அமைத்தகட வுட்படை கொதிப்போடு
ஆசில கணிப்பில இராமன் அருள் நிற்ப

கரன், தூடணனைக் கண் இமைக்கும் நேரத்தில் தூள் தூளாக்கிய இராமன் வீரத்தைக் குறைத்து எடைபோடாதே நான் சொல்வதைத் தயவு செய்து கேட்டு மனதை மாற்றிக் கொள் என்று வேண்டிய மாரீசன் வார்த்தைகள் செவிடன் காதில் ஊதிய சங்கு போல் வீணாகியது.

உன்னால் எனக்கு உதவ முடியுமா? இல்லையென்றால் நானே பார்த்துக் கொள்கிறேன் என்று வீம்புடன் திரும்பிய இராவணனைப் பார்த்து

உன்வயின் உறுதி நோக்கி
    உண்மையின் உணர்த்தினேன் மற்(று)
என்வயின் இறுதி நோக்கி
    அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்
நன்மையும் தீமை அன்றோ

நாசம்வந்(து) உற்ற போ(து)

புன்மையின் நின்ற நீராய்!

செய்வது புகறி என்றான்.

உன் நன்மைக்காக உண்மையை, தர்மத்தை எடுத்துச் சொன்னேன் அல்லாமல் என்னுடைய உயிர் பிரியப் போவதைக் கருதி அச்சத்தால் சொல்லவில்லை; நீ என் உறவினன். உனக்கு உதவுவது என் கடமை; என்ன செய்ய வேண்டும் என்று சொல் என இராவணனிடம் கூறி அவன் உரைத்தது போலவே பொன்மான் வேடம் போட்டுப் பஞ்சவடி நோக்கிச் சென்றான்.

*(தொடரும்...)*

## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 15. திருச்சேறை என்னும் தண்சேறை

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பதினைந்தாவது திவ்ய தேசம், திருச்சேறை என்னும் தண்சேறை. சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பதினைந்தாவது திருத்தலமாகும். இத்தலம் குடவாசல் வழியாகத் திருவாரூர் செல்லும் சாலையில் கும்பகோணத்தில் இருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்தலம் கிருஷ்ணாரண்ய தலங்களில் ஒன்றாகும்.

இங்கிருக்கும்

மூலவர் – சாரநாதன்

தாயார் – சாரநாயகித் தாயார்

உற்சவர் – பஞ்சலெஷ்மி சமேத சாரநாதர்

தீர்த்தம் – சாரபுஷ்கரணி

விமானம் – சார்விமானம்

கோலம் – கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

இந்த க்ஷேத்திரம் பஞ்சசார க்ஷேத்திர மென்றும் அழைக்கப்படுகின்றது. இங்கு சார க்ஷேத்திரம், சாரநாதன், சாரநாச்சியார், சார புஷ்கரணி, சார விமானம், என ஐந்து சாரங்கள் உள்ளன.

இக்கோவில் ஏழு நிலை இராஜகோபுரம் மூன்று பிரகாரங்களுடன் கம்பீரமாக அமைந்துள்ளது. மூலவர் சாரநாதர் கையில் புஷ்பத்துடன் அனுக்கிரகம் செய்யும் கோலத்தில் உள்ளார். சாரநாயகித் தாயாருக்குத் தனிக்கோவில், கோபுர வாசலோடு அமைந்துள்ளது. உற்சவமூர்த்தி சாரநாயகி, கஜலெஷ்மியாகத் தரிசனம் தருகிறார். கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கும் சாரநாதப் பெருமாளுக்கு வலப்புறம் மார்க்கண்டேயர் எழுந்தருளியுள்ளார் என்றும் பதினாறாய், சிரஞ்சீவியாய் இருக்கும் வரம் பெற்ற மார்க்கண்டேயர், இறைவனின் திருவடிகளே சிரஞ்சீவத்துவத்தை விட மேன்மை தரும் என்பதை உணர்ந்து திருச்சேறையில் அருள்செய்கின்ற சாரபரமேஸ்வரர், காலபைரவர் ஆகியோரை வழிபட்டு, பின்னர் சாரநாதப் பெருமாளின் திருவடியில் முக்திபெற்றார்.

ஒருமுறை, தஞ்சாவூரை ஆண்ட அழகிய மணவாள நாயக்க மன்னர், தனது இஷ்ட தெய்வமான மன்னார்குடி இராஜகோபால சுவாமிக்குக் கோவில் கட்ட ஏற்பாடு செய்தார். அப்பொறுப்பைத் தனது மந்திரி நரசபூபாலனிடம் ஒப்படைத்தார். கும்பகோணத்தில் இருந்து திருச்சேறை வழியாக வண்டிகளில் மன்னார்குடிக்குக் கற்கள் ஏற்றிச் செல்லப்பட்டன.

அமைச்சர் நரசபூபாலனுக்கு இஷ்ட தெய்வம் சாரநாதர். அதனால் திருச்சேறைக் கோவில் பரிபாலனத்திற்காக, வண்டிக்கு ஒரு கல்லாக திருச்சேறையில் இறக்கி வைக்கச் சொன்னார் நரசபூபாலன். இதைச் செவியுற்ற மன்னன், அச்செய்தி உண்மையானது தானா என்று சோதிப்பதற்காக, திருச்சேறை வந்தார். இந்த இக்கட்டிலிருந்து தன்னைக் காக்குமாறு, எம்பெருமானிடம் நரசபூபாலன் வேண்டினார். மன்னர் வந்து இத்தலத்தில் இறங்கியதும், திருச்சேறைப் பெருமாள் அவருக்கு மன்னார்குடி இராஜகோபாலனாகவே காட்சியளித்தார். அது கண்டு, மிகவும் ஆச்சரியமுற்ற மன்னன், நரசபூபாலனுடன் தானும் உடனிருந்து திருச்சேறைப் பெருமாளுக்கு எண்ணற்ற சேவைகள் செய்தார்.

இத்தலத்தில் இராஜகோபால சுவாமி, ருக்மிணி, சத்யபாமா சந்நிதி உள்ளது.

இத்தலத்தில் வனவாச இராமர் எழுந்தருளியுள்ளார். இந்த வனவாச இராமரை, சடைமுடியோடு, காட்டிலிருந்த திருக்கோலத்தில், மரவுரி தரித்த கோலத்தில் காணலாம்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ.நா. மீனவனார் திருச்சேறை குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. அருள்படர்ந்த மலை போன்றவன், மரகதப் பொன் போன்ற மேனியுடையவன், படமெடுத்து ஆடுகின்ற பாம்பைத் தலையணையாய்க் கொண்டு துயில்கின்றவன், மலர்ந்திருக்கும் தாமரைகள் சேர்ந்து ஆடுகின்ற வயல்சூழ்ந்த நகரமான திருச்சேறையில் இருக்கின்றான். அவனுடைய காலடிகளை, கைநிறைய மலரெடுத்துத் தூவி வணங்கச் சொல்லும் முதல் பாடல் :

***மைவிரியும் மலையனையான் மரகதப்பொன் மேனியினான்***
***செய்விரியும் தாமரைகள் சேர்ந்தாடும் வயல்நகரம்***
***பைவிரியும் பாம்பணையான் பயில்கோவில் திருச்சேறை***
***கைவிரியும் மலர்தூவிக் காலடிகள் வணங்குமினே***

2. விந்திய மலையின் அடிவாரத்தில், ஒரு சமயம் கங்கை, யமுனை, சரஸ்வதி, சிந்து, காவிரி, நர்மதை, கோதாவரி ஆகிய சப்த நதிகளும் மங்கையராக உருவெடுத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது, அப்பக்கம் சென்ற விஸ்வாஸ் என்ற காந்தருவன், வணக்கம் சொல்லிக் கடந்து சென்றான், நதிமங்கையர் ஒவ்வொருவரும் தன்னைப் பார்த்துத்தான் வணக்கம் சொன்னான் என்று வாதம் செய்தனர். வாதம் வேண்டாம், அவனிடமே கேட்டுவிடலாம் என்று தீர்மானித்து, அவனிடம் யாரைப் பார்த்து வணக்கம் செய்தாய்? எனக் கேட்க, அவனோ, உங்களில் யார் பெரியவரோ, அவரைப் பார்த்து வணக்கம் செய்தேன் எனக் கூறிச் சென்றான்.

பழையபடி விவாதம் ஆரம்பிக்க, கங்கை, காவிரியைத் தவிர மற்ற அனைவரும் ஒவ்வொருத்தராகப் பின்வாங்கினர். இறுதியில், கங்கையும், காவிரியும் நியாயம் கேட்க, நாரதரின் ஆலோசனைப்படி, பிரம்மாவின் சத்யலோகத்திற்குச் சென்றனர். பெருமாள் வாமன அவதாரம் எடுத்து மூன்றடி அளக்கும் பொழுது, முதலடியில்

மேலுலகத்தை அளப்பதற்காகத் தனது திருப்பாதத்தைச் சத்யலோகத்தில் வைத்தார். அப்போது, ஆகாய கங்கையைக் கோரி எடுத்து, அதைத் திருப்பாதத்திற்குத் திருமஞ்சனம் செய்தேன். அந்நீர் தான் பெருக்கெடுத்து ஓடிக் கங்கையாக பூலோகத்தில் உருவெடுத்தது. அதனால் கங்கைதான் பெரியவள் என்று சொல்லிவிட்டார் பிரம்மா.

காவிரிக்கு மனம் உடைந்து போயிற்று. கங்கைக்குக் கிடைத்த புகழ் தனக்கும் வேண்டுமென்று பிரம்மனின் ஆலோசனைப்படி, சாரபுஷ்கரணியில் உள்ள மரத்தடியில் வந்து உட்கார்ந்து கடுமையாகத் தவம் செய்தாள். கோடையில் பஞ்சாக்கினி மத்தியிலும், குளிர் காலத்தில் ஜலத்தின் மத்தியிலும் கடுந்தவம் செய்தாள். மஹாவிஷ்ணு, ஒரு தை மாத பூச நட்சத்திரத்தன்று, வியாழன் சஞ்சரிக்கும் காலத்தில், சிறு குழந்தையாய்த் தோன்றித் தவழ்ந்து வந்து காவிரியின் மடியில் அமர்ந்தார். அக்குழந்தை மஹாவிஷ்ணுவே என்பதை உணர்ந்த காவிரி, மஹாவிஷ்ணுவின் பரிபூரண தரிசனத்தை வேண்டினாள். உடனே விஸ்வரூப தரிசனம் காட்டினார். அப்பொழுதும் காவிரி சமாதானம் அடையவில்லை. பின் வைகுந்தபதியாகக் காட்சி தந்தார். அதாவது, எம்பெருமான் கருடவாகனத்தில் சங்கு சக்கரதாரியாக, தனது வலதுகரத்தில் பத்மம் என்னும் தாமரையுடன், வைகுந்தத்தில் இருப்பது போல் காட்சியளித்தார். பின் எம்பெருமான் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, மஹாலெஷ்மி, சாரநாயகி என்னும் 5 தேவிகள் புடைசூழ, அருட்காட்சி புரிந்தார்.

இக்காட்சியைக் கண்டு பேரானந்தம் கொண்ட காவிரி, பெருமாளிடம் இதே கோலத்தில் இங்கு காட்சி தர வேண்டுமென்றும், கங்கையினும் மேன்மையைத் தனக்குத் தர வேண்டும் எனவும் வேண்டினாள். காவிரியின் வேண்டுதலுக்கிணங்க, ஸ்ரீதேவி, பூதேவி, மஹாலெஷ்மி, நீளாதேவி மற்றும் சாரநாயகித் தாயார் ஆகிய பஞ்சலெஷ்மி சமேதராக சாரநாதன் இத்தலத்தில் உற்சவராக எழுந்தருளியுள்ளார்.

ஸ்ரீரங்கத்தில் பெருமாள் வந்து சயனிக்கும் பொழுது, அங்கு இருபக்கமும் பெருமாளின் திருவடியைத் தொட்டு ஓடிக் கொண்டே இருக்கப் போகின்றாய். அப்பொழுது கங்கையைக் காட்டிலும் உனக்கு

ஏற்றம் வந்து விடும் என்று கூறிய சாரநாதருக்கு நன்றி தெரிவிக்கும் விதமாகக் காவிரித் தாயார் மடியில் குழந்தையுடன் கர்ப்பக்கிரகத்தில் பெருமாளுக்கு இடப்பக்கம் எழுந்தருளியுள்ளார். அக்காட்சி ஓவியமாகவும் தீட்டி வைக்கப்பட்டுள்ளது.

இது தவிர காவிரித்தாய் கண்ணனை மடியில் அணைத்த திருக்கோலத்தில் இருக்கும் திருக்கோவில், சாரபுஷ்கரணியின் மேற்குக் கரையில் அரசமரத்தடியில் அமைந்துள்ளது. இவ்வாறு, காவிரிக்கு வரம் தந்த கண்ணனை, பூக்கள் மலர்ந்திருக்கின்ற திருச்சேறையில் பொலிகின்ற சாரநாதனை, திருமங்கையாழ்வாருடைய நாவால், 13 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட எம்பெருமானை, மாமுனிவர்களின் தெய்வத்தைப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல் :

***காவிரிக்கு வரம்தந்த கண்ணன் எனும் பேராளன்***
***பூவிரியும் திருச்சேறை பொலிசார நாதனைத்தன்***
***நாவிரியும் தமிழாலே நலம்பாடும் திருமங்கை***
***மாவிரதம் உடையோரின் மறைப்பொருளைப் போற்றுதுமே***

3. ஒரு பிரளய காலத்தில், நான்முகனாகிய பிரம்மனுக்கு வேதங்களையும், ஆகமங்களையும் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவர், மண்ணால் ஒரு குடம் செய்து, அதனுள் வேதங்களையும் ஆகமங்களையும் வைக்க முயன்றார். ஆனால் குடம் உடைந்து போயிற்று. பிரம்மன், மீண்டும் மீண்டும் மண்ணெடுத்துக் குடம் செய்ய முயற்சி செய்தாலும், எந்த மண்ணிலும் குடம் நிலையாய் இருக்கவில்லை.

இதனால் மனம் வருந்திய பிரம்மன், மஹாவிஷ்ணுவை வேண்டினார். அப்போது மஹாவிஷ்ணு, நான் பூலோகத்தில் மிகவும் விரும்பி உறையும் சாரச்சேத்திரம் என்னும் திருச்சேறையில் இருக்கும் மண் மிகவும் சாரம் நிறைந்தது. அதாவது சத்து நிறைந்தது. எனவே அங்கிருந்து மண்ணெடுத்துக் குடம் செய்திடுக. குடம் உடையாமல் நிலைத்திருக்கும் என்றருளினார்.,

பிரம்மனும் அவ்வாறே செய்து, வேதங்களையும் ஆகமங்களையும் காப்பாற்றிப் பராமரித்தார். இவ்வாறு, தேவர்கள், பூவுலகினர் என

அனைத்துவகை உயிரினங்களின் வாழ்வாதாரத்தின் சாரமான வேதங்களையும், ஆகமங்களையும், இத்தலத்துச் சாரமான மண்ணால் ஆன குடம், தாங்கிக் கொண்டிருப்பதால், இத்தலம் திருச்சாரம் என்று அழைக்கப்பட்டது. அதுவே தற்போது மருவி திருச்சேறை ஆயிற்று. மண் கொடுத்த திருக்குளம் சார புஷ்கரணி எனப்பட்டது.

அவ்வாறு, நான்மறையாகி வேதங்களைக் காத்த தலத்தில் இருந்தருளும் மான்போன்ற விழிகளையுடைய சாரநாயகித் தாயாரின் மணவாளனை, காடுமணக்கும் துளசிமலர் அணிந்தவனை, கருவண்ண மேகம் போன்றவனை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல் :

***நான்முகனார் திருச்சேறை நன்மண்ணால் கடஞ்செய்து***
***நான்மறையை அதில்மறைத்து நல்லபடி காத்தபதி***
***மான்போலும் விழிசார நாயகிதன் மணவாளன்***
***கான்மணக்கும் துளவமலர்க் கார்முகிலை வணங்குமினே***

4. எம்பெருமான், தைப்பூச நன்னாளில் குழந்தையாய்க் காவிரித் தாயின் மடியில் தவழ்ந்ததால், இந்த விஷ்ணு கோவிலில், தைப்பூசம் கொண்டாடப்படுகின்றது. பத்துநாள் திருவிழா, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை தை மாதம் பூச நட்சத்திரத்தில், வியாழ கிரகம் வரும்பொழுது இத்தலத்து சாரபுஷ்கரணியில் நீராடி, சாரநாதனை வழிபடுதல் நலம். இது மகாமகக் குளத்தில் நீராடுதலுக்கு ஒப்பாகும். இப்பெருமாளை வழிபட்டால், காவிரியில் நூறு முறை முங்கி எழுந்த புண்ணியம் கைகூடும்.

எம்பெருமான் மாமதலைப் பிரானாய், அதாவது குழந்தையாய்த் தவழ்ந்து வந்து காவிரிக்கு மேன்மை செய்த தனிமுதல் தெய்வம். அத்தெய்வம் திருச்சேறைக்கு அரசன். ஆயர்களின் குலக்கொழுந்து. தன்னுடைய செவ்வாயால், புல்லாங்குழலை இசைப்பவன். அவனுடைய திருத்தாளைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

***மாமதலை தானென்று மாதரசி காவிரிக்குத்***
***தாமதலை ஆனதொரு தனிமுதலை திருச்சேறைக்***
***கோமகனை ஆயர்மனைக் குலக்கொழுந்தைச் செவ்வாயால்***
***தேமதுரக் குழலிசைப்பான் திருத்தாளைப் போற்றுமினே***

5. குற்றம் நிறைந்த மனம் உடையவரை மாற்றுகின்றவன் அரங்கன். அவன், அழகு மிகுந்த மார்பில் திருமகளைத் தாங்கியுள்ளான். பேசுவதற்கு அரிய புகழை உடையவன். பெருமையுடைய திருச்சேறையில் வீற்றிருக்கும் சாரநாதனை ஆசையுடன் தொழுதேத்த அன்பர்களை வரச்சொல்லும் ஐந்தாம் பாடல் :

*தேசுடைய மார்பில் திருமகளும் குடியிருக்க*
*மாசுடைய மனத்தாரை மாற்றுதிரு மாலரங்கன்*
*பேசரிய புகழுடையான் பீடுபெறு திருச்சேறை*
*ஆசையுடன் தொழுதேத்த அன்பர்களே வந்திடுமின்*

தேவர்களும் மானிடர்களும் வந்து சேவிக்கின்ற மெல்லிய தளிர் போன்ற திருவடிகளைக் கொண்டவனை, வண்டுகள் பண் இசைக்கும் நந்தவனங்கள் சூழ்ந்த குளிர்ச்சியான திருச்சேறை சாரநாதப் பெருமானைக் கண்குளிரத் தரிசித்து, உள்ளம் உருகி, கைகளின் ஆசை தீரும்படி வணங்குவோரை நாம் எண்ணினால், கொடிய தண்டனைக்கு நாம் ஆளாக மாட்டோம். பாவங்கள் நம்மைச் சேராது எனக் கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*உண்ணாது வெங்கூற்றம் ஓவாத பாவங்கள் சேரா மேலை*
*விண்ணோரும் மண்ணோரும் வந்திறைஞ்சும் மென்தளிர் போலடியினானை*
*பண்ணார வண்டியம்பும் பைம்பொழில் சூழ்தண் சேறையம்மான் தன்னைக்*
*கண்ணாரக் கண்டுருகிக் கையாரத் தொழுவாரைக் கருதுங்காலே.*

*(தொடரும்...)*

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

## 81

ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் கடந்து சென்றால் தான் இறைவனை அடைய முடியும்; ஒரு காலில் முள் தைத்து இருக்கிறது; அந்த முள்ளை எடுக்க வேறு ஒரு முள் தேவைப்படுகிறது; முள்ளை எடுத்த பிறகு இரண்டு முள்களையும் எறிந்து விடுகிறோம்; இறைவன் ஞானம், அஞ்ஞானம் இரண்டையும் கடந்தவன்.

## 82

ஒரு மனிதன் ஒரு கடிதத்துடன் கடைக்குப் புறப்பட்டான்; வீட்டுக்கு வாங்க வேண்டிய சாமான்கள் எவை எவை என்ற விவரம் அந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தன; புறப்படும் நேரத்தில் அந்தக் கடிதத்தாள் காணாமல் போய்விட்டது; அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் மிகவும் சிரமப்பட்டுத் தேடிப் பார்த்தனர்; இறுதியில் அந்தத் தாளைக் கண்டு பிடித்துவிட்டனர்; என்ன என்ன வாங்க வேண்டும் என்று இப்போது அவனுக்குத் தெளிவாகி விட்டது; அவனுக்கு அந்தக் கடிதம் தேவைப்படவில்லை; தேவையான பொருள்களை வாங்கப் புறப்பட்டுவிட்டான்; சாஸ்திரங்களால் ஒருவன் இறைவனை எப்படி அடைய வேண்டும் என்று புரிந்து கொண்டுவிட்டால் பின்னர் அவனுக்குத் தேவைப்படுவது முயற்சி மட்டுமே.

## 83

எந்தக் குழந்தை அப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டு வரப்பின் மேல் செல்லுகிறதோ, அந்தக் குழந்தை தகப்பனாருடைய கையை விட்டுவிட்டு ஒருவேளை வயலில் விழுந்து விடக்கூடும்; ஆனால், தகப்பனார் எந்தக் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டிருக்கிறாரோ, அந்தக் குழந்தை, ஒரு போதும் வயலில் விழுந்துவிடாது.

## 84

எப்படிப்பட்ட கைங்கர்யம் செய்தால் ஈஸ்வரனை அடையலாம்? என்று ஒரு சீடர் கேட்டார். அதற்குப் பரமஹம்சர் சொன்னார்;

கைங்கரியத்தில் பேதமே கிடையாது; இந்தக் கைங்கரியந்தான் ஈசனிடம் சேர்க்கும், அது சேர்க்காது என்றெல்லாம் கருத இடமில்லை; நீ எதைச் செய்தாலும் சரியே; செய்வதை முழுமனத்தோடு செய்; அத்தியந்தப் பிரேமையோடு செய்; ஈசுவரன் அருளால் அனுகூலமான சந்தர்ப்பங்கள் உருவாகும்.

**85**

நீ ஈசுவரனைத் தேடுகிறாயா? அப்படியானால், அவனை மனிதனிடம் தேடு; அவனுடைய தெய்விகம், மற்றைய வேறு பொருள்களிடத்தைக் காட்டிலும் மனிதனிடமே விசேஷமாகப் படிந்துள்ளது.

**86**

ஒரு மணியை எடுத்து, நாம் அடிக்கும் போது, அடுத்தடுத்து வரும் அதன் ஒவ்வொரு ஓசையும் தனித்தனி உருவத்தை உடையது போலவே தோன்றும்; ஆனால், அடிப்பதை நிறுத்திவிட்டால், சிறிது நேரம்வரை தொடர்ந்து ஒலிப்பது போலக் கேட்டு, பின்னர், கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து போகும். மணியின் ஓசையைப் போலத்தான் இறைவனின் இயல்பும்; உருவம் உள்ளவனாகவும் இருக்கிறான்; இல்லாதவனாகவும் இருக்கிறான்.

**87**

சாது ஒருவர் மக்கள் நெருக்கடி மிகுந்த தெருவழியே போய்க் கொண்டிருந்தார். அப்போது, எதிர்பாராத விதமாக, ஒரு துஷ்டனுடைய காலை மிதித்துவிட்டார்; உடனே அந்தப் பொல்லாதவன் மிகவும் கோபம் கொண்டு, சிறிதேனும் தயக்கமோ, இரக்கமோ காட்டாமல் சாதுவை அடித்துவிட்டான். அடி தாங்காத சாது மயக்கமடைந்து விழுந்துவிட்டார். உடனே, அவருடைய சீடர்கள் சாதுவைத் தூக்கி, உட்காரவைத்து மயக்கம் தெளியச் செய்தார்கள். சீடர்களில் ஒருவர், சாதுவைப் பார்த்து, சுவாமி, இப்போது உங்களின் மயக்கம் தெளிவித்து, உங்களுக்கு உதவியும் உபகாரமும் செய்கிறாரே, இவர் யார் என்று தெரிகிறதா? என்று கேட்டார். சாது நிமிர்ந்து பார்த்துவிட்டு, என்னை யார் அடித்துத் தள்ளினானோ, அவன் தான் இப்போது உதவியும் செய்கிறான் என்றார்.

## 88

பரமஹம்சருக்குத் தொண்டையில் சிரமம்; எதுவும் சாப்பிட முடியாத நேரம். என்னால் ஒன்றும் சாப்பிட முடியவில்லையே, சாப்பிடுவதற்கான சக்தி அளிக்கமாட்டாயா? என்று பராசக்தியிடம் கேட்டுக் கொண்டார். ஏன்? உன்னுடைய சீடர்கள் எத்தனைபேர் இருக்கிறார்கள்! அவர்கள் மூலம் நீ சாப்பிட்டுக் கொண்டுதானே இருக்கிறாய்! என்றாள் பராசக்தி! ஓகோ என்று பரமஹம்சர் வெட்கம் அடைந்தார்.

## 89

தவமும் தவத்தின் ஆற்றலும் கொண்ட சாது ஒருவர் இருந்தார். அதன் காரணமாக அவருக்கு மிகுந்த தற்பெருமை உணர்ச்சியும் கர்வமும் இருந்தது. அவருடைய தற்பெருமைக் குணாம்சத்தைக் குறைத்து நல்வழிப் படுத்த நினைத்த இறைவன், ஒரு நாள் அவர் முன்னால் தோன்றி ஒரு யானையை வரவழைத்து, இந்த யானையைக் கொல்ல முடியுமா? என்று கேட்டார். ஓ, முடியுமே என்று சொன்ன சாது, ஒரு பிடிமண்ணை எடுத்து யானை மீது எறிந்தார்; யானை கீழே விழுந்து இறந்து விட்டது. சரி, இந்த யானையைப் பிழைக்க வைக்க முடியுமா? என்று கேட்டார்; முடியுமே என்று உரைத்த சாது, ஒரு பிடி மண்ணை எடுத்து முன்போலவே யானை மீது போட்டார்; யானை பிழைத்து எழுந்து விட்டது. இப்போது இறைவன், அந்தச் சாதுவைப் பார்த்து, இதனால் உங்களுக்கு உண்டான பயன் என்ன? உங்களுக்கு ஏதேனும் அபிவிருத்தி உண்டா? என்று கேட்டார். இப்படியெல்லாம் செய்துவிட்டால் இறைவனை அடைந்துவிட முடியுமா? என்றும் கேட்டார். அந்தச் சாது மௌனம் ஆனார்.

## 90

பழங்கள் நிறைந்த மரம், கனத்தினால் தாழ்ந்து வளைந்து தோற்றம் அளிக்கும்; அதுபோல, ஒருவன் பெருமை அடைய வேண்டுமானால், அடக்கத்தோடும், பணிவோடும் இருக்க வேண்டும்.

*(தொடரும்...)*

# கேட்ட அருணாசல மந்திரம்

தமிழாகரர் தெ.முருகசாமி
(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

ஞானத் தபோதனரை வாவென்றழைக்கும் மலை அண்ணாமலை எனக் குரு நமச்சிவாயர் பாடியருளிய அண்ணாமலை வெண்பாவின் பாடலுக்கேற்ப அண்ணாமலையார் அழைக்கத் திருவண்ணாமலைக்கு வந்தவர்தான் மகான் இரமணர் ஆவார்.

மதுரை மாவட்டப் பாண்டிப் பதினான்கில் ஒன்றான திருச்சுழி என்ற அழகிய திருத்தலத்தில் 21.12.1877ல் சுந்தரம் ஐயர் - அழகம்மை அம்மணி என்னும் தம்பதியர்க்கு இரண்டாவது மகனாகப் பிறந்த வெங்கட்டராமன் என்பவர்தான் பின்னாளில் நாடெல்லாம் போற்றி வணங்குதற்குரிய இரமண மகரிஷியாகப் புகழ்பெற்றார்.

பதினாறு வயது பள்ளிப் பருவநாளில் ஒரு நாள் தன் வீட்டுக்கு வந்த உறவினர்களைப் பார்த்து நீங்கள் எங்கிருந்து வந்துள்ளீர்கள்? எனக் கேட்ட சிறுவனுக்குப் பதில் கூறுவதாய், வந்தவர்கள் அருணாசலத்திலிருந்து என்றார்கள்.

அருணாசலமா? அது எங்கிருக்கிறது, என வியப்போடு கேட்டான் சிறுவன். அதுதானப்பா திருவண்ணாமலை என்று உறவினர் உச்சரிப்பை முடிப்பதற்குள் சிறுவனுக்குக் கேட்ட பெயரில் கிளர்ச்சி கிளம்பிவிட்டது. விவேகம் பொங்கித் ததும்பியது. மலைமீது மேகம் படிவது போல நாட்டம் முந்தியது. கண்ணப்பரின் காளத்திமலை வேட்டம்போல ஆதி அருணாசலத்தின் மீது பிறந்த ஆவேசம் அடங்காததால் சீதையின் பெயரைக் கேட்ட இராவணன் நிலையைக் கம்பர் கேட்ட நங்கையை மறந்திலாதான் என்றது போன்ற நிலையில் ஞானம் மயக்கம் மேலிட்டு விட்டதால் சிறுவன் அருணாசல மந்திரத்தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டான். ஆம்! தன்னை மறந்த லயம் என்பது போலக் கை, கால்களை நீட்டித் தரையில் படுத்த சிறுவன் நானார்? என் உள்ளமார்? நான் உயிரா? உடலா? சாவு என்றால் என்ன, எது சாகிறது? என அடுக்கடுக்கான ஞான விசாரணைகள் வார்த்தைகளாக வெளிவந்தன. சிறுவனின் சிந்தனைச் சுழற்சியால் பெற்றோரும் உற்றோரும் மற்றோரும் திக்குமுக்காடினர்.

குவியலான ஞானக் குளியல் குளித்துக் கரையேறுவதுபோல வெடித்துக் கிளம்பிய உள்ளத்தின் ஆவேசத்தால் தன் உடலுக்குள் கட்டுப்படாத ஒருபொருளுடன் பேச முயற்சித்து நான் செத்துவிட்டேனா? எனக் கூறியவாறே எழுந்தான்; ஆம் நான் செத்தால்தானே நாம் ஆகலாம் என்ற ஞானத் துளிர்ப்பில் சிறுவனின் உள்மனம் (அந்தராத்மா) அவனை வீட்டிற்குள் இருக்க ஒட்டாமல் விரட்டி அடித்ததால் பிறந்த வீட்டின் அருகிருந்த பூமி நாதர் கோயிலுக்குள் அடைக்கலம் புகுந்தான். தியானத்தில் ஆழ்ந்தான். ஞானத்தீர்வும் உத்தரவும் கிட்டின.

நான் என் தகப்பனைத் தேடிச் செல்கிறேன். அவர் அழைத்த உத்தரவின்படி இந்த இடத்தை விட்டுக்கிளம்பி விட்டேன், இந்த நற்செயலுக்காக யாரும் கவலைப்பட வேண்டாம். என்னைத் தேடவும் வேண்டாம் என்றொரு கடிதம் எழுதி வைத்துவிட்டுப் புறப்பட்டுவிட்டான் சிறுவன். ஆம்!

***வீட்டுக் காசைப் படுவாரை வீட்டை விட்டுத்துரத்தியே***
***வேண்டாண்டி யாயுலகில் ஓட்டாண்டி யாக்குவார்க்குத்***
***தெண்டனிட்டேன் என்று சொல்லடி***

என்று கூறும் வடலூர் வள்ளலாரின் வாக்கு திருச்சுழிச் சிறுவனின் வாழ்வில் திருச்சுழியலாய் மெய்யாகிவிட்டது.

முத்தர் மனமிருக்கும் மோனத்திலே என்பர். மோன நிலைபெற்ற வெங்கட்டராமன், விவேக ராமனாகிவிட்டதனால் அவன் அவராகிவிட்ட நிலையில் ஞானப் பயணம் தொடர்ந்தது. அணிந்திருந்த காதுக் கடுக்கண் போன்றவை மிகை எனக்கருதியதால் அருணாசலப் பயணத்திற்கு அந்தக் கடுக்கன் நாலு ரூபாய்க்கு விலைபோனது. விலையில்லா ஞானம் கைவரப்பெற்ற வளர்பிறையானவர், தொண்டர்யாரும் இல்லாத் தனிமையில் அண்ணாமலையில் முழு நிலவாகவேண்டித் தொடர்வண்டி ஏறி விழுப்புரம் வழியே திருக்கோவிலூர் அடைந்தார்.

ஆன்மாக்களின் திருக்கு (மாறுபாட்டுணர்வு) ஓவ வேண்டும் அதாவது அழிதல் வேண்டும் என்ற கருத்தில் அமைந்த திருக்கோவிலூரிலிருந்து திருவண்ணாமலை செல்லக் கையில் பணம்

இல்லாததால் தொடர்வண்டிப் பயணம் தடைப்பட, நடையில் நின்றுயர் இராகவன் போல வெங்கட்டராமச் சிறுவர் கால் நடையாய்த் தொடர்ந்தார். ஆம்! 1.9.1896ல் அவர்தம் கால்கள் அண்ணாமலையில் பதிந்தன. குடுமித் தேவரைக் கண்ட கண்ணப்பரைப் போல அருணாசலேசுரரைக் கண்டதும் ஆர்ப்பரித்தகடல் அமைதி கொண்டது போல் ஆனார். அபிராமிப் பட்டரைப்போல் கருவறையில் கண்ணீர்வர ஞானமயக்கில் ஞானக் கிறுக்கானார்.

அருணாசலேசுரரின் ஆளுமைக்குப் பாத்திரமான அந்தச் சிறுஞானி, சந்நிதியைவிட்டு வெளியே வந்ததும் யாரோ ஒருவர் தம்மைப் பார்த்து முடி எடுக்கட்டுமா? எனக் கேட்ட வார்த்தையைச் சகுனமாக நினைந்து முடி துறந்தார். ஆம் ஞான முடி சூடிக்கொள்ள வேண்டியவர்க்கு இந்தச் சிகைமுடி மிகைதானே! மேலும் – ஆடைக்குள் நாம் அனைவரும் சமம் என்பதே உண்மை (We are all naked and equal in our shirt) என்ற E.M. பார்க்கர் எனும் மெய்ஞ்ஞானியின் கருத்துப்படி உடலின் ஆடைகளுள் மிகை எனக் கருதி இலங்கோடு மட்டுமே தரித்தார். மேனியில் கிடந்த மினுமினுப்பான பூணூலையும் கழற்றிவிட்டார். ஒரு ஞானப் பழமானார். அருகிருந்த ஆயிரங்கால் மண்டபப் பாதாள இலிங்கேசுரர் சந்நிதியில் தனித்தியானத்தில் ஆழ்ந்துவிட்டார்.

சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை என்ற மணிவாசகத்தின் வாக்குப்படிப் பாதாளேசுரருடன் ஐக்கியப் பட்டுவிட்டு, சிறுஞானி – சிவஞானியானார். பாலயோகி ஒருவர் பாதாளலிங்கேசுரரிடம் பாடுகிடக்கிறார் என்ற புகழ் எங்கும் பரவியது. அவரது மகத்துவம் அங்கிருந்த சேஷாத்திரி சுவாமிகளால் மெருகேறியது. பெரியபுராணப் பெருமிழலைக் குறும்பரின் யோக நிலைபோலப் பாலயோகியைக் காணப் பெருங்கூட்டம் பெருகிற்று. இதனால் தனியிடம் தேடிய பாலயோகி தம்மை வாவென்றழைத்த அண்ணாமலை மீதேறினார். அநேகக் குகைகள் அவர் தங்க வரவேற்றாலும் திருவிருப்பாட்சி என்ற குகையையே தாம் விரும்பித் தங்குமிடமாகத் தேர்ந்தெடுத்துத் தங்கினார்.

குடத்துள் விளக்காய் இருந்த பாலயோகியின் புகழ் வரவரக் குன்றிலிட்ட விளக்காம் கார்த்திகை விளக்குப் போல் குவலயம் எங்கும் ஒளிபரவியது. கார்த்திகை தீபம் போன்ற பெரும் புகழ் ஞானத்தில் சந்நியாசம் பெற்ற பாலயோகிக்கு அப்போது இருபத்தோர் வயது.

உருஏறத் திருஏறும் என்பார்கள். அவ்வாறே அவர் தங்கித் தவம் புரிந்த குகை ஞானச்சூழலானது. மக்கள் கூட்டம் பெருகியதால் வேறோர் ஆசிரமத்தை அமைத்துக்கொள்ள அது அருளாலயமாய் மாறியது. அங்கே ஆன்மீக உரைகள் அருட் பிரசாதமாக வழங்கப்பட்டன. இதனால் அமைதி முனிவர் என்ற ஒருவர் பாலயோகியின் சீடராகிவிட்ட நிலையில் ஞானத் தபோதனராகிய குருவை ரிஷிரமணர் எனக் கூறினார். பிரகடனப்படுத்தப்பட்ட அப்பெயரே பின்னாளில் ரமணரிஷி என்பதாக நிலைத்துவிட்டது.

மரணமற்றவர் ரமணர் என்ற பொருளுக்கேற்ப இராஜயோகியாக முதிர்ந்துவிட்ட பாலயோகி இரமணாசிரமம் அமைத்து அன்னதான அறக்கட்டளையைத் தொடங்கியதிலிருந்து அச்சேவையே அறாத அறச்சேவையாகச் சிகரம் தொட்ட சாதனையாகி உடற்பசி போக்குவதன் மூலம் உயிர்ப்பசிக்கு ஞானத்தை ரமணர் - தெய்வமாய் இருந்து வழங்கிக் கொண்டிருக்கிறார். கேட்ட அண்ணாமலை நாமம் உபதேசம் மந்திரமாக இருந்ததால் அந்த ஞான அதிர்வே ரமணரை உலகிற்குக் காட்டியது எனலாம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### வினை செயல் வகை

(செயலைச் செய்யும் முறை)

1. **சூழ்ச்சி முடிவு துணிவுஎய்தல் அத்துணிவு
   தாழ்ச்சியுள் தங்குதல் தீது.**

சூழ்ச்சி முடிவு - செயலைச் செய்ய ஆராய்வதின் முடிவு; துணிவுஎய்தல் - அதனைச் செய்வதற்கான துணிவைப் பெறுதல்; அத்துணிவு - அந்தத் துணிவு; தாழ்ச்சியுள் - காலம் தாழ்த்துவதில்; தங்குதல் தீது - தங்குமானால் குற்றம் ஆகும்.

செயலைச் செய்ய ஆராய்வதின் முடிவு அதனைச் செய்வதற்கான

துணிவைப் பெறுதல் ஆகும்; அந்தத் துணிவு காலம் தாழ்த்துவதில் தங்குமானால் குற்றம் ஆகும்.

எய்தல், தங்குதல் – தொழிற் பெயர்

**2. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க தூங்காது செய்யும் வினை.**

தூங்குக – காலம் தாழ்த்துக; தூங்கிச் செயற்பால – தாழ்த்திச் செய்ய வேண்டியவற்றில்; தூங்கற்க – காலம் தாழ்த்தக் கூடாது; தூங்காது – தாழ்த்தாமல்; செய்யும் வினை – செய்ய வேண்டிய செயல்கள்.

காலம் தாழ்த்திச் செய்ய வேண்டியவற்றில் காலம் தாழ்த்துக; தாழ்த்தாமல் செய்ய வேண்டிய செயல்களில் காலம் தாழ்த்தக் கூடாது.

தூங்குக, தூங்கற்க – வியங்கோள்.

**3. ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்காற் செல்லும்வாய் நோக்கிச் செயல்.**

ஒல்லும்வாய் எல்லாம் – இயலும் இடங்களில் எல்லாம்; வினை நன்றே – செயலைச் செய்வது நல்லது; ஒல்லாக்கால் – இயலாத இடத்தில்; செல்லும்வாய் – அச்செயல் முடியும் இடம்; நோக்கிச் செயல் – எண்ணிப் பார்த்துச் செய்ய வேண்டும்.

இயலும் இடங்களில் எல்லாம் செயலைச் செய்வது நல்லது; இயலாத இடத்தில் அச்செயல் முடியும் இடம் எண்ணிப் பார்த்துச் செய்ய வேண்டும்.

செயல் – வியங்கோள்.

**4. வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால் தீயெச்சம் போலத் தெறும்.**

வினைபகை என்ற – செயல் மற்றும் தடைகள் என்ற; இரண்டின் எச்சம் – இரண்டினுடைய ஒழிவும்; நினையுங்கால் – எண்ணினால்; தீயெச்சம் போல – தீயினது ஒழிவு போல; தெறும் – தேங்கியிருந்து பின் கெடுக்கும்.

செயல், அதற்கு ஏற்படும் தடை என்ற இரண்டனுடைய ஒழிவும் எண்ணினால் தீயினது ஒழிவுபோலத் தேங்கியிருந்து பின் கெடுக்கும். எனவே செயலில் ஒழிவும் தடையில் ஒழிவும் கூடாது.

வினை பகை – உம்மைத் தொகை

தீயெச்சம் – ஆறாம் வேற்றுமைத் தொகை.

**5. பொருள்கருவி காலம் வினை இடனோடு ஐந்தும்**
**இருள்தீர எண்ணிச் செயல்.**

பொருள் கருவி காலம் வினை இடனோடு – வினை செய்யும் போது பொருள் பற்றியும் பயன்படும் கருவி பற்றியும் செய்யும் காலம் குறித்தும் செயல் குறித்தும் செய்யும் இடம் பற்றியும்; ஐந்தும் – இவை ஐந்தையும்; இருள்தீர – மயக்கம் இன்றித் தெளிவாக; எண்ணிச் செயல் – ஆராய்ந்து செய்ய வேண்டும்.

வினை செய்யும் போது பொருள், கருவி, காலம், செயல், இடம் என்னும் ஐந்தையும் மயக்கம் இன்றித் தெளிவாக ஆராய்ந்து செய்ய வேண்டும்.

**6. முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல்.**

முடிவும் – வினை செய்யும் போது அதற்கான முடிவும்; இடையூறும் – வினைக்கு வரும் தடைகளும்; முற்றியாங்கு எய்தும் – வினை முற்றுப் பெற்ற போது அடையும்; படுபயனும் – பெரும் பயனும்; பார்த்துச் செயல் – எண்ணிச் செய்ய வேண்டும்.

வினை செய்வதற்கான முடிவும் அதற்கு வரும் தடைகளும் வினை முற்றுப் பெற்றபோது அடையும் பெரும் பயனும் என இவற்றை எண்ணிச் செய்ய வேண்டும்.

**7. செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை**
**உள்ளறிவான் உள்ளங் கொளல்.**

செய்வினை செய்வான் – செய்ய உள்ள செயலைச் செய்பவன்; செயல் முறை – அதைச் செய்யும் முறைமையாவது; அவ்வினை – அந்தச் செயலின்; உள்ளறிவான் – உள்ளதான தன்மையை அறிந்தவனுடைய; உள்ளங் கொளல் – கருத்தினை அறிந்து கொள்ளலாகும்.

செய்ய உள்ள செயலைச் செய்பவன் அதைச் செய்யும் முறைமையாவது அந்தச் செயலின் தன்மையை அறிந்தவனுடைய கருத்தினை அறிந்து கொள்ளலாகும்.

செய்வினை – வினைத் தொகை

செய்வான் – ஆண்பால் படர்க்கை எதிர்கால வினைமுற்று

உள்ளறிவான் – கால வழுவமைதி

**8. வினையான் வினைஆக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று.**

வினையான் – செய்கின்ற வினையால்; வினை ஆக்கிக் கோடல் – பிறிதொரு வினையையும் செய்து கொள்ள வேண்டும்; நனைகவுள் – மத நீரால் நனைந்த கன்னத்தை உடைய; யானையால் யானை யாத்தற்று – யானையால் பிறிதொரு யானையையும் பிணிப்பது போன்றது ஆகும்.

செய்கின்ற ஒரு வினையால் பிறிதொரு வினையையும் செய்து கொள்ள வேண்டும். அது மத நீரால் நனைந்த கன்னத்தை உடைய யானையால் பிறிதொரு யானையையும் பிணிப்பது போன்றது ஆகும்.

**9. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே**
**ஒட்டாரை ஒட்டிக் கொளல்.**

நட்டார்க்கு – நட்புக் கொண்டோர்க்கு; நல்ல செயலின் – நல்லவற்றைச் செய்தலை விட; விரைந்ததே – விரைந்தது ஆகும்; ஒட்டாரை – பகைவரை; ஒட்டிக் கொளல் – நட்பாக்கிக் கொள்ளுதல்.

நட்புக் கொண்டோர்க்கு நல்லவற்றைச் செய்தலை விடப் பகைவரை விரைந்து நட்பாக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

**10. உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்**
**கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

உறை சிறியார் – வாழ்நாள் சிறியதாய் உள்ளவர்; உள்நடுங்கல் அஞ்சி – தம்முள் நடுங்குதலை அஞ்சி; குறைபெறின் – வேண்டும் இன்றியமையாமை ஏற்பட்டால்; கொள்வர் பெரியார்ப் பணிந்து – வலியாரிடத்தில் பணிந்து ஏற்றுக் கொள்வர்.

வாழ்நாள் சிறியதாய் உள்ளவர் தம்முள் நடுங்குதலை அஞ்சி வேண்டும் இன்றியமையாமை ஏற்பட்டால் பெரியவராகிய வலியாரிடத்தில் பணிந்து ஏற்றுக் கொள்வர்.

வினை செய்யும் காலத்தில் அச்சம் ஏற்படின் பெரியாரைப் பணிந்து குறை தீர்வர்.

*(தொடரும்...)*

## அழிவுறும் காதலார்
## (ம.கார்மேகம்)

சேதி நாட்டுச் சிற்றரசர் மெய்ப்பொருள் நாயனார்; அவரை வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள் என்று திருத்தொண்டத் தொகை கூறுகிறது. தத்தா நமரே என்னச் சொல்லி வான் உலகம் பெற்றவன் சேதிபன் மெய்ப்பொருள் என்று திருவந்தாதி உரைக்கிறது. கொல்லவந்த முத்தநாதன் தான் நினைந்த அப்பரிசே செய்தான் என்பார் சேக்கிழார். அவனுக்கும் அருள்புரிந்தவர் மெய்ப்பொருள் நாயனார். அவர்தம் புராணத்தில் இடம்பெறும் நாயனாரின் மனைவியைப் பற்றி ஒன்றிரண்டு செய்திகளே கிடைக்கின்றன.

முத்தநாதன் புகுந்து நாயனார் துயிலும் இடம்வரை சென்று விடுகிறான். அந்நேரம் புரவலன் துயிலப் பக்கத்தில் மன்றலங்குழல் மென்சாயல் மாதேவி அமர்ந்திருக்கப் பார்க்கின்றான் முத்தநாதன்; உடனே நாயனாரின் துணைவியார் மன்னனை எழுப்புகிறார். நாயனார்க்குக் கூறப் புதிதாக ஆகமம் கொண்டு வந்ததைக் கூறும் முத்தநாதன் நாறுபூங் கோதைமாது தவிரவே சொல்ல வேண்டும் என்கிறான். உடனே மெய்ப்பொருள், திருமகள் என்ன நின்ற தேவியாரை அந்தப்புரத்திடைப் போக ஏவுகிறார். கணவரின் ஆணைப்படி அரசியார் சென்றுவிடுகிறார். இவ்வளவே அவர் பெறும் இடம்.

முத்தநாதன் தான் நினைத்ததைச் செய்து விடுகிறான். தத்தன் என்ற காவலாளன் ஓடிவருகிறான். அவனைத் தடுக்கிறார் நாயனார். அத்திறம் அறிந்தார் எல்லாம் முத்தநாதனைத் தாக்க வருகின்றனர். அந்த இடத்தில் அரசிபற்றிய செய்தி இல்லை. முத்தநாதனைப் பாதுகாப்பாகக் கொண்டு போய் விட்டுத் தத்தன் மீள்கிறான். ஐயன் இன்றெனக்குச் செய்தது யார் செய்யவல்லார் என்று கூறும் நாயனார் திருநீற்றின் பெருமை காத்து உய்வீராக எனக் கூறுகையில் அரசியல் ஆயத்தார்க்கும் அழிவுறு காதலார்க்கும் உரைத்தார் என்கிறார் சேக்கிழார். ஒருவேளை கணவராகிய மெய்ப்பொருள் நாயனாரின் இறுதி நிலைக்காகக் கலங்கி அழிவுற்று நின்ற காதலார் என்று அவர்தம்

மனைவியாரைக் குறிக்கிறார் எனலாம். இமயப்பாவை காதலர் காட்சிதந்த போது நாயனாரின் மனைவியையன்றி நாயனார்க்கு மட்டுமே காட்சிதந்தார் எனல் வேண்டும். இப்புராணத்தில் நாயனாரின் மனைவிக்கு இறைவன் காட்சிதருவதாகக் கூட இல்லை என்பதால் அவருக்குச் சிறப்பிடம் தரப்படவில்லை எனலாம்.

வந்தவன் முத்தநாதன் என்று தெரிந்தே திருநீறு பூசிய காரணத்தினால் அவனைப் பாதுகாப்பாக அனுப்பி வைக்கத் தத்தனிடம் மெய்ப்பொருள் நாயனார் கூறுகிறார். முத்தநாதன் உயிர்ப்பாதுகாப்புடன் செல்லக் காரணமான தத்தனைப் பாராட்டுகிறார். ஆயினும் தன் துணைவியாராகிய அரசிக்குச் சிறப்புத் தரவில்லை; பாராட்டவில்லை. சேக்கிழாரின் நோக்கம் நாயனார் பெருமை கூறுவது மட்டுமே தவிர அரசியின் பங்களிப்பு ஏதும் இல்லை என்று விட்டுவிட்டார் எனக் கொள்ள வேண்டும்.

## உலகளாவிய ஆன்மீக விழிப்புணர்வு
## சைவ நெறியின் பார்வையில்
## (இல.பழனியப்பன்)

ஆன்மீகம் என்பது பொதுவான இறையுணர்வையே குறிக்கும். அந்த இறையுணர்வு என்பது நம்மை மீறிய சக்தியே. ஆன்மீக விழிப்புணர்வின் விளைவாக இன்று நம்மை மீறிய சக்தி உள்ளது என்பதை இறைநம்பிக்கை இல்லாதவர்களும் உணரத் தொடங்கி விட்டார்கள்.

ஆகவே ஆன்மீக ஒருமைப்பாடு என்பது உலகளாவிய மறுக்க முடியாத பேருண்மையே. அவ்வாறே இந்த ஆன்மீகம் மனித குலம் முழுமைக்கும் பொதுவான ஒன்றே! நம்மை மீறிய சக்தியை ஒவ்வொருவரும் வெவ்வேறு வடிவத்தில் வழிபடுகிறார்கள்.

இந்த உணர்வை முறைப்படுத்தி நம்மை வழி நடத்தவே மதமாகிய சமயங்கள் தோன்றின. ஆனால் ஒரு காலகட்டத்தில் இன்று இந்தச் சமயங்கள் பல்வேறு திசைகளிலே பயணித்துக் கொண்டிருப்பதால் ஆன்மீக உணர்வு சவால் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது.

மதம் என்ற சொல்லுக்கு தீவிரம் என்பதே பொருள். இந்த நிலையைக் கண்ணுற்று விரக்தியடைந்த வடலூர் வள்ளலார் மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும் என்று இறைவனிடமே வேண்டினார். அடிப்படை ஒருமைப்பாடு இன்று தேவையான அளவிற்கு இல்லாத காரணத்தாலேயே உலகில் கலவரங்கள், வன்முறைகள் பாலியல் கொடுமைகள், சாதி மத பிணக்குகள் ஒவ்வொரு நாளும் பெருகி வருகின்றன.

ஒன்றை நம்மால் உருமாற்ற மட்டுமே இயலும். ஆனால் அதை முற்றிலும் அழிக்க முடியுமா?

உடல் + மனம் + ஆன்மா மூன்றும் இணைந்ததே மனிதம். உடல் நிரந்தரமானது அல்ல ஒரு நிலையில் அது அழிந்தே தீரும். ஆனால் மனம் நமது செயல் மூலம் நினைவு பெறப்படுகிறது.

ஆன்மா மட்டுமே என்றும் நிலையானது நிரந்தரமானது ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் தமிழர்களாகிய நாம் ஆன்மீக உணர்விற்கு, திரு மூலச்சித்தர் மூலம் முன்னுரை தந்துள்ளோம்.

ஆம் ஒன்றே குலம்! ஒருவனே தேவன் என்ற வைர வரிகள் அதை உலகுக்கு உணர்த்துகிறது. இது நமக்கே உள்ள தனிச்சிறப்பு. மனித குலம் ஒன்று என்பது தானே உலகளாவிய உண்மை. அவ்வாறே நம் எல்லோருடைய உடல் அமைப்பும் அவ்வாறுதானே ஒரே மாதிரியாகத்தானே அமைந்துள்ளது.

இறைவன் ஒருவனே என்பதைத் தொடக்க காலத்திலேயே அடையாளம் காட்டியது சைவநெறி மட்டுமே. சைவநெறி சமயம் கடந்த எல்லை இல்லாத ஓர் உன்னத நெறி இறையுணர்வு வழிவாழ அன்பின் வழியிலேயே இறைவனைக் காண வேண்டும் என்று அது வலியுறுத்துகிறது. ஒவ்வொரு நாளும் இரையாகிய உணவைத் தேடுகிறோம். ஆனால் அதற்குக் காரணமான இறைவனையே மறந்து விடுகிறோம். இது நியாயமா?

நமது நிலை கண்ட மகான்கள் ஞானிகள் சற்று விரக்தியுடன் இரை தேடுவதோடு இறைவனையும் தேடு என்று நமக்கு அறிவுறுத்துகிறார்கள்.

காலம்

வடிவம் இந்த மூன்றுக்கும் பிறப்பிடமே ஆன்மா என்கிறார் அரவிந்த அன்னை.

இடம்

ஆகவே இந்த மூன்றையும் மாற்றவும், வெல்லவும் ஆன்மாவினால் மட்டுமே இயலும் என்று கூறுவது ஆழ்ந்து சிந்தித்துச் செயல்பட வேண்டிய ஒன்றாகும். இது மேலும் நமது வாழ்க்கைப் பயணத்தைப் புனிதமாக்குகிறது.

நெற்றியின் மத்தியில் புருவத்திற்கு மேல் பொட்டு வைத்துக் கொள்வதே ஆன்மாவை நினைவுபடுத்திக் கொள்வதற்காகவே. ஆனால் அது இன்று நம்மிலே பலருக்கு புரியவும் இல்லை ஏன்? தெரியவும் இல்லை ஆன்மாவின் சக்தியை உணர்ந்து செயல்பட்டால் மட்டுமே காலம் சுருங்குவதையும் துயரம் விலகுவதையும் உணர முடியும்.

அவ்வாறே உடல் செயல்பாடு குறைவதையும் உணர முடியும். இடி (Thunder) என்ன சொல்கிறது. எதையும் இடித்துச் சொல்லும் வழக்கம் உள்ளது என்பதை அந்தச் சொல் நினைவுபடுத்துகிறது.

இறை ஞானிகள் அவதரித்த போது இடியும், மின்னலும் ஏற்பட்டு அசரீரி போல நம்மை அறிவுறுத்தின காட்டாக பகவான் கண்ணன். ஏசுபிரான் ஆகியார் அவதரித்த போது இந்த இடிமின்னலை ஏற்பட்டு நம்மை நினைவு படுத்தியது. அதுவே உண்மையான ஆன்மீக வாழ்வின் அடையாளமாகும்.

1. கொடு (Give)
2. இரக்கப்படு (Sympathaise)
3. கட்டுப்படுத்து (Control)

இந்த மூன்றையும் பின்பற்றுவதே உண்மையான ஆன்மீக வாழ்வு ஆகும்.

அவ்வாறு இது நமது வாழ்க்கைப் பயணத்தையும் புனிதமாக்குகிறது.

***கொடு*** என்பது வாழ்வின் கொடைத்தன்மையைக் குறிக்கிறது.

கொடுக்காதவனுக்கு வாழ்வின் உண்மையான பொருள் புரியாது.

குமணன்
அதியமான் ஆகியோரே உலகில்
பாரி

சிறந்த கொடையாளிகள் ஆவர். ***நீ கொடுப்பது*** உன்னிடமே வந்து சேரும் என்று பைபிள் பகர்கிறது. நம்மவர்களும், கொடுத்துக் கொடுத்துப் புண்ணியம் தேடினார்கள். ஒருவருக்குத் தேவைப்படுவதைக் கொடுத்த பின்னரே. நமது மனநிலை எப்படி இருக்கிறது என்பதை அனுபவித்துப் பார்த்தால் மட்டுமே தெரியவரும்.

சம்பாதிப்பதில் பொருள் ஈட்டுவதில் பத்து (10) சதவிகிதத்தை அறச் செயலுக்குக் கொடு என அறிவுறுத்துகிறதாம் இசுலாம். இது நாம் சற்று மனது வைத்தால் நம்மால் இயன்ற ஒன்றே. நீ இந்த உலகத்திற்கு வந்த போது என்ன கொண்டு வந்தாய் இழப்பதற்கு, இது கீதை காட்டும் பாதை ஆம் இறுதி நாளில் நாம் எல்லாவற்றையும் விட்டுத்தானே செல்கிறோம். இதை உணரும் போது மனித வாழ்வின் நிலையாமையை நிரந்தரமற்ற தன்மையை உணர முடியும் என்று இருக்கும் போது நிறைவோடு கொடுப்பதே சிறந்த அறம் எதுவும் என்னுடையது அல்ல (Nothing is Mine) எதுவும் உன்னுடையதல்ல (Nothing is Yours) எதுவும் நம்முடையதல்ல (Nothing is Ours) இதைத்தான் பட்டிணத்து அடிகள் காதற்ற ஊசியும் கடைவழிக்கு வாராது என்று அழகாக, தெளிவாக நமக்குப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். மற்றவர்களின் துயரங்களைப் புரிந்து கொண்டு அவருடைய நிலையில் நம்மை வைத்து இரக்க உணர்வுடன் செயல் படுதலே உண்மையான சமயவாதிகள் நமக்குக் காட்டும் அறம்.

இந்த அறத்தின் இலக்கியமாகத் திகழ்ந்தவர்கள். அண்ணல் காந்தியடிகள், அன்னை தெரேசா ஆகியோரே; இரக்க உணர்வு மட்டுமே மனிதனுக்குப் பெருந் தன்மையை மன்னிக்கும் மனப்பான்மையைக் கொடுக்கவல்லது.

அதே நேரம் கட்டுப்படுத்துதல் என்பதை மிகக் கவனமாகக் கையாள வேண்டும்.

1) பேராசையைக் கட்டுப்படுத்துதல்

2) வன்முறையைக் கட்டுப்படுத்துதல்

3) கோபத்தைக் கட்டுப்படுத்துதல்

4) தூக்கத்தைக் கட்டுப்படுத்துதல்

5) காமத்தைக் கட்டுப்படுத்துதல்

ஆகியவையே மிகமிகத் தேவையான ஒன்று.

இவைகளைக் கட்டுப்படுத்துதல் என்பது மனிதனை மிருக நிலையில் இருந்து தெய்வீக நிலைக்கு உயர்த்தும். அதாவது படிப்படியாக மிருகநிலை, மனித நிலை, தெய்விக நிலை ஆகியவற்றை அடைவதே இதன் அகப் பொருள்; நமது சமயங்கள் சில முக்கிய வாழ்வியல் நெறிகளை நமக்குத் தந்துள்ளார்கள். அவை

1) பசி தீர்த்தல்

2) முன்னோர்களை நினைவு கூறுதல்

3) நேரடித் தெய்வங்களை நமது தாய் தந்தையைப் பேணுதல்

4) வழிபாட்டுத் தலங்களுக்குச் சென்று தியானித்தல் ஆகும்

சைவ நெறியைத் தாயாகக் கொண்ட இந்து சமயம் மூலமே வெளிநாட்டுத் தத்துவ ஞான அறிஞர் எமர்சன் ஞானம் பெற்றார். இறைத் தத்துவம் ஒன்றே தோல்வி தராத முதலீடு. Godnes is the only investment that never fails சைவநெறி என்பது மொத்தத்தில் சமயங்கடந்து உலகுக்கு இறைநெறியை உணர்த்துகிற ஒப்பற்ற நெறியாகும்.

ஆகவே நாம் நமது இறை நெறியை உலகளாவச் செய்து நாமும் வாழ்ந்து, மற்றவர்களையும் உய்வடையச் செய்வோம்.



## திருவிளையாடற்புராணம்

### 59. நரியைப் பரி ஆக்கியது

சுற்றம் எனும் பாசபந்தம் நீங்கி ஆணவம் அறுத்துச் சிவயோகம் நின்ற வாதவூரடிகளை அரிமர்த்தன பாண்டியன் மறுதினம் தன்னிடம் வரவழைத்து, குதிரைகள் இன்னமும் வரக்காணோமே, ஏன்? என்று வினவினான். திருவாதவூரரும் மறுமொழியாக, இன்று தொடங்கி மூன்று நாட்களுக்குள்ளாகக் குதிரைகளெல்லாம் வந்துவிடும்; குதிரைக் கூடத்தைப் பெரிதாக அமைக்கச் செய்க; பல குளங்களைத் தோண்டச் செய்க; ஊர் முழுதும் அலங்காரம் செய்விக்க என்று வேண்டிக்கொண்டார். வாதவூரர் சொன்னபடியே பாண்டிய வேந்தனும் செய்வித்தான்.

மூன்று நாட்களும் போய்விட்டன. குதிரைகள் தாம் வரக்காணோம். நான்காம் நாளும் வந்தது. பாண்டியன் சிந்திக்கலானான். இன்னும் குதிரைகள் வந்த பாடில்லை! வாதவூரர் குதிரைகள் வாங்கிய முறைதான் என்ன? குதிரைகள் எப்போதுதான் வருமோ? என்று கருதிச் சினமடைந்தான். தன்னெதிரே நின்ற தண்டலாளரை விளித்து, எம்மிடம் பொன் கவர்ந்து சென்ற வாதவூர் கள்வனைக் கொண்டு சென்று தண்டியுங்கள்; எமது பொன் முழுவதையும் அவனிடமிருந்து திரும்பி வாங்குங்கள் என்று ஆணையிட்டான்.

அரிமர்த்தனனது கடும் கோபம் கண்ட தண்டலாளர் அஞ்சினர். உடனடியாக வாதவூரரிடம் சென்று, பொன் கொடுப்பதற்கு இனி வகை என்ன? கூறும் என்று சீறி விழுந்தனர். எதுவும் விடை சொல்லாது நின்ற அடிகள்மீது பாரமான கற்களைச் சுமத்தினர். கனம் பொருந்திய அடிகள் சிவபெருமான் திருவடியைச் சிந்தை செய்திருந்தார். பாரம் அனைத்தையும் பரமன் பொறுத்தான். அடிகள் துன்பம் நீங்கிநின்றார். வாதவூரடிகளின் நிலையைத் தண்டலாளர் கண்டனர். இது மாயம், என்று நினைத்து மிகுந்த கோபம் கொண்டு அவரது கைகளிலும் கால்களிலும் கிட்டி போட்டு நெறித்தனர். அந்தக் கடுமைக்கும் அஞ்சாத அடிகளார் சிவபெருமான் சேவடியே சிந்தித்திருந்தார்.

அன்றிரவு வாதவூரடிகளை இருண்ட சிறைக்கூடத்திலே தள்ளி விலங்குகள் பூட்டித் துன்புறுத்தினர் தண்டலாளர்கள். பரமேசன் திருவடிகளையே தியானித்திருந்தார் இரவு முழுதும் வாதவூரார்.

விடிகின்ற நேரத்திலே சிவபக்தர்களின் திருப்பள்ளி யெழுச்சிப் பாடலின் ஒலியையும், சங்கு முழக்கத்தையும், வேத நாதத்தையும் தன் செவிகளாரக் கேட்டிருந்தார் வாதவூரர். சோமசுந்தரப் பெருமானது விமானமிருந்த திசை நோக்கிக் கைகூப்பித் தொழுதார். சிவபெருமானை நோக்கி, எந்தாய்! அனைத்துலகும் ஈன்றாய்! சிறியேற்கு இரங்காயோ? இன்றென்னைக் கைவிட்டாய்! அரசன் தமர் இழைக்கும் வன் கண்ணோய் பாராய், உன் தன்மை இதுவா! என்று மனங்குழைந்து முறையிட்டு அழுதார்.

மாணிக்கவாசகரது முறையீடு சிவபெருமானது திருச்செவியில் புகுந்தது. உடனே சிவபெருமான் வாதவூரரைச் சிறையிலிருந்து விடுவிக்கத் திருவுள்ளம் கொண்டார். நந்திகேசுவரர் முதலான கணநாதர்களை அழைத்தருளினார். அவர்கள் அனைவரும் வந்து பணிந்து நின்றனர். இறைவரும், ஆவணி மாத மூல நாள் முற்பட்டு வந்துவிட்டது; ஆதலால் இன்றைக்கு நான் முற்பட்டு, பாண்டியன் கோபம் கொள்வதற்கு முன்னரே சென்று குதிரைகளைக் கொடுத்துவிட வேண்டும். நீங்கள் எல்லாரும் காட்டில் திரியும் நரிகளையெல்லாம் கொண்டு வந்து அவைகளைக் குதிரைகளாக்கி அவற்றின் மீது குதிரைச் சேவகர்களாக ஏறிக்கொண்டு முன்னே செல்லுங்கள். நாமும் குதிரைச் சேவகர்போல வருகின்றோம் என்று இயம்பியருளினார்.

இறைவன் திருவாணைப்படியே சிவகணநாதர்கள் தாங்கள் பிடித்துவந்த நரிகள் எல்லாவற்றையும் ஓரிடத்தில் கொணர்ந்து சேர்த்தனர். பின்னர் அவற்றையெல்லாம் நல்ல உயர்சாதிக் குதிரைகளாக்கி அவற்றின் மேலேறிச் சேவகம் செய்தனர்.

கணநாதர்களான குதிரைவீரர்கள் பல்வகை உடையுடுத்தி, பல்வகைப் பணி பூண்டு; பல் வகை ஆயுதங்கள் தாங்கி, தங்கள் தங்கள் பரிகளின் மேல் ஏறி அமர்ந்தனர்.

சோமசுந்தரப் பெருமான் மந்திரியாகிய மாணிக்கவாசகர் பொருட்டல்லாமல் பாண்டியன் அரிமர்த்தனது பிறவி நோயைத் தீர்க்கும் பொருட்டுத் தாமும் ஒரு குதிரைச் சேவகனாக எழுந்தருளுவதானார். தமது திருவடியில் வீரக்கழலை அணிந்தார். திருக்கரத்திலே ஞான வாளை ஏந்தினார். அலங்காரமான உடைகளும் நவமணிகள் பதித்த ஆபரணங்களையும் அணிந்தார். நெற்றியிலே திருநீறு துலங்கப்பூசினார். திருக்கோலம் காட்டி வேதக் குதிரையின் மீது எழுந்தருளினார். வேதக் குதிரையின் லட்சணம் எத்தகையது? அறம் பொருள் இன்பம் வீடு என்பனவே அதன் கால்கள், ஞானகாண்டம், கரும காண்டம் என்பனவே செவிகள்; பரம் அபரம் என்ற ஞான மிரண்டும் கண்கள், விதியே முகம், விலக்கே வால், ஆகமங்கள் புற அணிகள், பிரணவமே கடிவாளம்; உபநிஷதமே அணை. பிரம்மாவின் முகங்களே அது தங்கும் லாயம். குதிரையின் காற்சிலம்புகள் ஒத்தன. பதினெட்டு வகை வாத்தியங்கள் முழங்கின.

மாயப்பரிக் கூட்டம் மேற்குத் திசையை நோக்கிக் கோலாகலமாக ஆரவாரம் செய்து புறப்பட்டது. சிவபெருமான் ஆரோகணித்த வேதப்பரி நடுநாயகமாகச் சென்றது. அசுவ சாஸ்திர லக்ஷணங்கள் நிரம்பிய உத்தமக் குதிரைகள் செல்வதைக் கண்ட மக்களனைவரும் வியப்பெய்திப் பாராட்டினர். தமது இச்சா சக்தியாலே திருவுருவம் எடுத்த சிவபெருமான் இந்திரஜால மகேந்திர ஜாலம் புரிபவனாக யாவரையும் நடந்தருளினார்.

தாவிச் சென்ற பரிகள் ஐம்புலன்களையும் நிகர்த்தன. பரிகளை அடக்கியாண்ட சேவகர்கள் மனத்தை நிகர்த்தனர். மனங்களிலே பொருந்தி நின்ற உயிரை நிகர்த்தது வேதக்குதிரை நடத்திய இறை.

வாத்தியங்களின் பெரு முழக்கமும், குதிரைகளின் கனைப்பும், சேவகரின் ஆரவாரமும் ஒன்றுகூடி ஒலிக்க வேதக் குதிரைப்பாகச் சிவனார் மதுரை மூதூருக்கு அரைக்காத தூரத்தில் வந்தருளினார்.

குதிரைகளின் வரவைத் தெரிந்தனர் மதுரை மாந்தர் பலர். சிலர் சிறைக்கூடத்துக்கு விரைந்து சென்று திருவாதவூரர் முன்பு நின்று,

அமைந்த நெறி வழுவாத பெரியவரே பல நிறம்கொண்ட ஏழு கடல்களும் எழுந்து வருவதைப் போலக் குதிரைப் பெருங் கூட்டம் வருகின்றது. இந்தச் சேதியைப் பாண்டிய மன்னனிடம் சொல்வீராக என்றனர். வாதவூரரும் இறைவன் திருவருளைச் சிந்தித்தபடியே பாண்டிய மன்னனிடம் சென்று தெரிவித்தார். அது கேட்ட மன்னன் அரிமர்த்தனன் உடல் பூரித்தான்; வாதவூரருக்குப் பரிசாக விலையுயர்ந்த முத்துமாலைகளையும் பட்டாடைகளையும் தந்தான். மந்திரியர் முதலானோர் புடைசூழச் சென்று தலைவாசலை அடைந்தான். அருகிலிருந்த ஒரு மாடத்தில் தங்கி, குதிரைகளின் வரவை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்து வீற்றிருந்தான்.

சோமசுந்தரம் தமது திருவிளையாடலைக் காட்டும் பொருட்டு, சற்றே காலந்தாழ்த்தினர். குதிரைகள் காணாத வேந்தன் சினந்து, இது பொய் என எண்ணி, திருவாதவூரரைத் தண்டிக்க வேண்டும் என்ற குறிப்போடு தண்டலாளரைப் பார்த்தான். அவர்களும் பாண்டியன் நினைத்தபடியே, பழிபாவங்களுக்குப் பயப்படாத தன்மையராய் வாதவூரருக்குக் கடும் தண்டனை கொடுத்தனர்.

சிவஞானியாராகிய வாதவூரரும் சோமசுந்தரப் பெருமானை நினைந்து அவர் தம் சேவடிகளையே போற்றிக் கொண்டிருந்தார். தேவா! தேவர்க்கரசே! சிறியேன் துன்பம் பொறுக்கவில்லை; அஞ்சேல் என்று அருளினீர்! ஆவியோடு உடலும் உம்முடையதே, என்னை உடையவரே! என்று ஏங்கி யிரந்து புலம்பி நின்றார். தண்டனை பெற்றுத் துடித்துப் புலம்பும் வாதவூரன் செவிகளிலே எக்காள ஒலிகள் கேட்டன. குதிரைகளின் குளம்படித் துகள் எங்கும் பரவியது. அரிமர்த்தனன் குதிரைகளின் வரவைத் தெரிந்தான். வாதவூரரை அழைத்துவரச் செய்தான். எல்லையற்ற பரிவு காட்டினான். எமது ராஜாங்க காரியங்களை உம்மைப்போல ஏற்று முடிப்பவர்கள் யார்? என்று கூறிப் பெருமகிழ்வுடன் அளவளாவினான்; அதே சமயத்தில் குதிரைகள் எல்லாம் சிறந்த தோற்றம் காட்டிய சேவகர்களோடு வந்து சேர்ந்தன.

கம்பீரமும் எழிலும் சிறந்த தோற்றமும் காட்டி வந்து நின்ற எண்ணற்ற குதிரைகளைப் பார்த்துப் பிரமித்துப் போனான். பாண்டியன்

அவற்றின் பொலிவிலே சொக்கிப் போனான். உவகை அவனை முழுக்காட்டியது. குதிரைச் சேவகரை வியப்போடு நோக்கினான். வாதவூரரைப் பார்த்து, இவர்களுள் தலைவர் யார்? என்று வினவினான். எல்லாம் தெரிந்த அமைச்சரோ, வேந்தே நான் அறியேன், என்றார். அப்போது குதிரைத் தலைவராக விளங்கிய சிவபெருமான் தமது வேதப் புரவியை நடாத்திய வண்ணம் பாண்டியன் எதிரே சென்று நின்றார். மன்னவா! எங்கள் குதிரையின் சிறப்பினைச் சற்றே காண்பாய், என்று கூறியருளினார். தமது குதிரையினை மல்ல, மயூர, வானர, வல்லிய, சரகதிகளும், பதினெட்டுவகைவிசித் திரநடை விகற்பங்களும் தோன்ற நடத்திக் காட்டியருளினார். பரம்பொருள் செய்து காட்டுவதைக் கண்ட சிவகணத் தலைவர்களும் தந்தம் குதிரைகளை நடத்திக் காட்டினர். அதனை யெல்லாம் கண்ட பாண்டியன் அவர்களை நோக்கி, உங்கள் தவைலன் யார்? என்று கேட்டான். குதிரைச் சேவகர்கள் சோமசுந்தரப் பெருமானைச் சுட்டிக்காட்டி இவர்தாம் என்றனர்.

அவரைக் கண்ட பாண்டியன் அரிமர்த்தனன் அருட்பார்வைக்கு இலக்கானான். தனது ஆசனத்தை விட்டு எழுந்தான், கைகளைத் தலைமேல் கூப்பிக்கொண்டு நின்றான். தன் நினைவு வந்ததும் தனது நிலைமையை நினைத்து வெட்கப்பட்டான். அவ்வாறு வெட்கமடைந்து நிற்கும் பாண்டியனைப் பார்த்தார் பரம்பொருள். மன்னவனே! உனது சொல் தவறாத வாதவூரர் உன் பொருளை யெல்லாம் கொணர்ந்து தாமாகவே எனக்கும் எனது ஆட்களுக்கும் ஏராளமாக வழங்கினார். அதன் காரணமாகத்தான் தேவர்களுக் கல்லாமல் மனிதருக்குக் கிடைப் பரியனவும், விலை குறிப்பதற் கரியனவும், அசுவ சாஸ்திர லட்சணத்திற்கு இயைந்தனவுமான நல்ல குதிரைகள் உனக்காக வந்தன. இன்று நீ என்னிடமிருந்து கயிற்றை மாற்றிக்கொண்டு விட்டால் இக்குதிரைக ளெல்லாம் உன்னுடையன வாகிவிடும். இதுவே முறை. நாளைக்கு எது நேர்த்தாலும் எனக்கும் உனக்கும் அது குறித்து யாதொரு வழக்கும் கிடையாது. இதுவே குதிரை வாணிகத்துப் பழக்கம், என்று மொழிந்தருளினார். பாண்டியன் மிக மகிழ்ந்து உடன்பாடு கொண்டான்; வாதவூரரைப் பெரிதும் பாராட்டினான்.

*(தொடரும்...)*

## செய்திக் குறிப்பு

அண்மையில் பாரதி 139வது ஜெயந்தி விழா சென்னையில் சின்மயா மிஷன் சேர்ந்த மண்டபத்தில் சின்மயா அறக்கட்டளையும் தேசிய சிந்தனைக் கழகமும் இணைந்து நடத்திய விழாவில் குருமகா சன்னிதானம் கலந்து கொண்டார்கள். பாரதி பிறந்த தினம் கொண்டாட்டத்தோடு இந்திய தேசிய சிந்தனைக் கழகத்தின் செயலாளர் ஆதலையூர் சூரியகுமார் எழுதிய மூன்று நூல்கள் மாட்சிமை பொருந்திய தமிழக ஆளுநர் உயர்திரு.ஆர்.என்.ரவி அவர்களால் வெளியிடப்பட்டன. அவற்றில் இரண்டு நூல்கள் பாரம்பரியப் பழக்கங்களில் அறிவியல் பின்னணி, தெய்வீக மூலிகைகள் ஆகியவை நம்முடைய கோவிலூர் திருமடத்தினால் அச்சிடப்பட்டு அளிக்கப்பட்டன. அந்நிகழ்ச்சியில் நம்முடைய குருமகா சன்னிதானம் ஆசியுரை வழங்கிப் பாரதியின் பெருமை, நூல்களின் பெருமை, நம் திருமடத்தின் பாரம்பரியம், நம் கலாஷேத்ரா அச்சகப் பதிப்பகத்தின் வெளியீடுகளின் தரம் ஆகியவை பற்றி விளக்கிப் பேசினார்கள். தமிழ்நாடு M.G.R மருத்துவ பல்கலைகழகத்தின் துணைவேந்தர் பேரா.முனைவர் சுதாசேஷய்யன் அவர்கள் பாரதி பாட்டுத் திறத்தையும் சுதந்திர வேட்கையையும் பற்றி அருமையான உரை நிகழ்த்தினார்கள். வெளியிடப்படுகின்ற நூல்களைப் பற்றியும் விளக்கம் அளித்தார்கள்.

மாண்புமிகு தமிழக ஆளுநர் ஆர்.என்.ரவி அவர்கள் மூன்று நூல்களையும் வெளியிட்டு அருமையான ஊக்க உரை ஒன்றை அவையினர் அனைவரும் மகிழ வழங்கினார்கள். நூலாசிரியர் ஆதலையூர் சூரியகுமார் ஏற்புரை வழங்கினார்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்